[29th September 1958

*Broadcasting of Madras State News items*

*619 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) (i) சென்னை அரசாங்க செய்தித்துறை மூலம் வெளியாகும் பத்திரிகைக் குறிப்புகள், (ii) சென்னை ராஜ்யம் சம்பந்தமாக நிர்ணயிக்கப்பட்ட பேச்சுகள், (iii) சென்னை ராஜ்யத்தின் அபிவிருத்தித் திட்டங்களின் முன்னேற்றத்தைப் பற்றிய பேச்சுகள் போன்ற சென்னை மாநில செய்திகளை ஒலிப்பரப்புவதற்காக 1958-ம் வருஷத்திலே அகில இந்திய ரேடியோவுக்கு அனுப்பப்பட்ட ரிபோர்ட் விவரங்கள் யாவை ?

(ஆ) இச் செய்திகளில் 1958-ம் வருஷம் ஜூலை மாதக் கடைசி வரைக்கும் எத்தனை செய்திகள் ஒலிப்பரப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சென்னை அரசாங்க செய்தித் துறை மூலம் வெளியாகும் எல்லா அறிக்கைகளும் பத்திரிகைக் குறிப்புகளும் வானொலி நிலயத்தாருக்கு அனுப்பப்படுகின்றன. அச் செய்திகளை வானொலி நிலயத்தினரும் செய்தி ஒலிபரப்புகளிலும், பிராந்தியச் செய்திகளிலும், உள்ளூர் அறிவிப்புகளிலும் தக்கபடி பயன்படுத்துகின்றனர். கனம் அங்கத்தினர் கேட்பது போல், இவற்றைக் கணக்கிட்டு, எண்ணிக்கையை குறிப்பிடுவது [சாத்தியமில்லை ; அதில் பலனுமில்லை. வானொலிப் பேச்சுக்களைப்] பொறுத்தவரை, " ராஜ்ய அபிவிருத்தித் திட்டங்கள் " என்ற பேச்சு வரிசை நிகழ்ச்சிகள், அரசாங்க செய்தித் துறையைக் கலந்து, ஏற்பாடு செய்யப்படுகின்றன.

SRI A. V. P. ASAITHAMBI : அவ்வப்போது, இந்த நாட்டில் இருக்கும் ஒவ்வொரு கட்சியும் சொல்லும் விஷயங்களை செய்தித் துறையின் மூலம் திரட்டி, மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பி, வானொலியில் ஒலிபரப்ப இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ? அவ்வாறு செய்வது, இந்த நாட்டு மக்களின் அறிவு வளமடைவதற்கு ஏதுவாக இருக்குமே எனவே அரசாங்கம் அவ்வாறு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கட்சிகள் கூறும் விஷயங்களில் சில மக்களின் அறிவு வளர்ச்சிக்கு அடிகோலுபவையாக இருக்கக்கூடும் ; அவைகளில் சில மக்களை பின்னுக்கு இழுத்துச் செல்லுபவையாகவும் இருக்கக்கூடும். ஆகையால் கனம் அங்கத்தினரின் யோசனையை அரசாங்கத்தார் ஒரு கொள்கையாக ஏற்றுக்கொள்ள முடியாது.

*Ayyamppulli and Vyapuri tanks*

*620 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : (on behalf of Sri P. S. K. LAKSHMIPATHI RAJ) : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

பழனி கஸ்பாவில் இருக்கும் அய்யம்புள்ளிகுளம், வையாபுரிக்குளம் போன்றவைகளை மராமத்துச் செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. The works have been sanctioned and they are in progress.

*Tractors for the use of ryots*

*621 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the amounts provided in 1958–59 for the purchase of tractors for the ryots have been disbursed; and

(*b*) to whom the amounts were disbursed, districtwise?